2 பக்கங்கள் 15 காசுகள்

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

பதிவு எண் எம். 8798

கதிர் 13 மதுரை 10-7-75 வியாழன் மலர் 134

**மதுரையில் பொதுக்கூட்டம்**

இன்று (10-7-75 வியாழக் கிழமை) மாலை 7 மணிக்கு 40-வது வார்டு கீரைத்துறையில்

**தோழர் என். சங்கரய்யா பேசுகிறார்**

## சௌதி அரேபியா கூட அமெரிக்க கம்பெனியை அரசாங்க உடமையாக்குகிறது

ரியாத், ஜூலை. 8—

சௌதி அரேபியாவில் 'அராம்கோ எண்ணெ குழு' என்னும் பெயரில் உள்ள அன்னிய நாட்டு எண்ணைக் கம்பெனிகளை சௌதி அரேபியா அரசாங்கம் நாட்டுடமையாக்கப் போகிறது. அதற்கான 2 நாள் பேச்சுவார்த்தைகள் ஜெனிவாவில் கடந்த சனிக்கிழமையோடு முடிவடைந்தது என சௌதி அரேபிய எண்ணை அமைச்சர் ஷேக் ஜாகி கூறினார். அக்கம்பெனியில் அமெரிக்காவின் பங்கு 40 சதவீதம்.

### அரசு கட்டித்தரும் மலிவு விலை வீடுகளை நடுத்தர மக்களும் வாங்க முடியாத அளவுக்கு கூடுதல் விலையாக உள்ளது

# நகர்ப்புறச் சொத்து உச்ச வரம்பு சட்டம் பங்களா சீமான்கள் மீது பாயாது

புதுடில்லி, ஜூலை. 9 —

**பிரதமர் இந்திராகாந்தி அவசரநிலைப் பிரகடனம்செய்த பிறகு, 20 அம்ச பொருளாதாரத்திட்டத்தை வெளியிட்டுள்ளார்.**

**அவற்றில் ஒன்று, நகர்ப்புற நிலங்களை சமூகஉடைமை ஆக்குவதும், காலி நிலங்கள் வைத்திருப்பதற்கும், உடைமைக்கும், புதுவீடுகள் கட்டுவதற்கும் ஆன பரப்பளவுக்கு மேல் வரம்பு கட்டுவதுமாகும். இதற்கான சட்டத்தை 20 அம்சத் திட்டத்தை அறிவித்த 1975 ஜூலை 1 முதல் அமுலுக்கு கொண்டுவரப்போவதாக மத்திய நிதியமைச்சர் சி. சுப்ரமண்யம் தெரிவித்துள்ளார்.**

அரையடுத்த, குறிப்பிடத்தக்க பெரும் கட்டிடங்களுக்கான மதிப்பீடுகளைத் தயாரிக்கவும், வரிஏய்ப்பைத் தடுக்கவும் தனிப் படைகள் அமைக்கப் போவதாகவும் பிரதமரின் திட்டம் கூறுகிறது.

நகர்ப்புற சொத்துக்களுக்கு உச்ச வரம்பு கட்டுவது ஒரு முக்கியமான விஷயம் தான்.

ஆனால் இதுகுறித்துஇதுவரை சொல்லப்பட்டதையெல்லாம வைத்து, இதன் கட்டுக்கோப்பையும் தன்மையையும் நோக்கும் போது, இது ஒன்றும் புதியதாக காணப்படவில்லை சில ஆண்டுகளுக்கு முன்னரே, நகர்ப்புற நிலங்களுக்கு வரம்பு கட்டி ஒழுங்கமைக்கும் மசோதா கொண்டு வரப்பட்டிருக்கிறது அதன் நகலும் தயாராகி விட்டது. பார்லிமெண்டின் இருசபைகளும கூட்டாகக் கூட்டப்பட்ட கடந்த பட்ஜெட் கூட்டத்தில். இதுகுறித்து ஜனாதிபதி பக்ருதீன் அலிஅகமது உரையில் குறிப்பிட்டுள்ளார்.

### உடைமை உறவுகளை மாற்றப்போவது இல்லை

இந்தச்சட்டத்தின் குறிக்கோள் மிகவும் அடக்க ஒடுக்கமானதுதான். இது நகர்ப்புற சமுதாய அமைப்பையோ சொத்து உறவுகளையோ தொடப்போவதில்லை. இந்த அமைப்பையும் உறவையும் மாற்றுவதற்கான முயற்சிகூட பிரதமரின் திட்டத்தில் காணப்படவில்லை.

நகர்ப்புறங்களில் நிலம் வைத்திருப்பதற்கும வீடு வைத்திருப்பதற்கும் வரம்புகட்டும் இந்தச் சட்டமானது கட்டப்பட்டுள்ள வீடுகளுக்கும் அதைச் சுற்றியுள்ள இடங்களுக்கும் அமுல் ஆகாதாம்.

அரசாங்கத்துக்குச் சொந்தமாக இருந்தாலு சரி—அல்லதுதனிநபர்களுக்கு சொந்தமாகஇருநதாலு சரி—நகரங்களின் இதயபாகத்தில்பெரியபங்களாக்களும் அதைச் சுற்றிலும பரந்த புலவெளிகளும பூந்தோட்டங்களுமாக வைத்திருந்தால்—வரவிருக்கும் புதிய சட்டமானது அவற்றின் மீது பாயப்போவதில்லை.

நகர்ப்புறங்களில் காலியாக விடப்பட்டுக்கிடக்கும மனைகளையும், புதிதாககட்டப்படும் கட்டிடங்களையும்தான இந்தப் புதிய சட்டம் பாதிக்குமாம்,

### நகர்அமைப்பு ஒழுங்குபட பொதுநிலம் ஆக்குக!

பிரதமரின் பேச்சில், திட்டமிடப்படாமல் மானாவாரியாக நகர்ப்புறங்கள் வளர்ந்து விட்டதாகவும், நகர்ப்புற நிலங்களையும் சொத்துக்களையும் விற்பதிலும் வாங்குவதிலும் சூதாட்டம் நடப்பதாகவும் குறிப்பிட்டுச் சொல்லியிருக்கிறார்.

இந்தப் பிரச்னைகளை எவ்வாறு திறமையாகச் சமாளிப்பது என்பது பற்றி பல ஆலோசனைகள் கூறப்பட்டுள்ளன. நகராட்சி, மாநகராட்சி எல்லைக்குள் உள்ள காலி நிலங்களையெல்லாம் பொது அதிகாரத்தின் ஆதிக்கத்தின் கீழ் கொண்டுவர வேண்டு. அந்த நிலங்களை, நகர அமைப்பு ஒழுங்கான முறையில் அமைக்கப்படுவதற்குப் பயன்படுத்த வேண்டும் இந்தபரந்த குறிக்கோள்களுக்கும் நோக்கங்களுக்கும் உகந்தவாறு, புதிய நகர்ப்புற நிலவரம்புச் சட்டம அமைதல வேண்டும.

முக்கிய பிரச்னை என்ன? குறிப்பிட்ட நகர்புற நிலவுடைமைக்கும், புதிய கட்டடத்தின் முன்னால் துருத்திக் கொண்டிருக்கும் நிலப்பரப்புக்கும வரம்பு கட்டுவது முக்கிய பிரச்னை அல்ல. நகர அமைப்பு திட்டத்திற்குப் வீடுகளை ஒங்காகக் கட்டுவதற்கும் இது மிகவும முக்கியமானதாகும். பொருளாதாரம் துரிதமாக நவீனமயமாகி விடுவதினாலும், தொழில்மயமாவதும்துரிதமாகிவருவதாலும் அதற்கு ஈடுகொடுக்கும் முறையில் நகரங்கள் சீரமைக்கப்படவேண்டும். அதாவது நகர்புறங்களுக்கு குடியிருப்பு வசதிகள் அளிக்கப்படவேண்டும். தொழிற்சாலைகளுக்கும் உகந்த இடவசதிகள் கிடைக்கவேண்டும இப்போதுள்ள நகர்ப்புறங்களில் இந்த வசதிகள் மிகக்குறைவாகவே உள்ளன.

நகர்ப்புற நிலவுடைமைககும், புதிய கட்டிடத்தின சுற்றும்புற மதில் இடத்துக்கும் மேல் வரம்பு வைதது விடுவதினால் பிரச்னை தீரப்போவதில்லை.

நகர்புறத்தில்வசிக்கும்பெரும்பாலான மக்கள், புதிய வீடுகள் கட்டிக் கொள்ள வசதியற்றவர்களாக உள்ளனர். அரசாங்கம் நிர்ணயித்துள்ள முறைப்படி புதிய வீடுகள் கட்டிக் கொள்ள வேண்டுமானாலும, அது நடுத்தர மக்களாலும் உயர்ந்த வருமானம் உள்ளவர்களாலும் கூட முடியாத காரியமாகவே இருக்கும். ஏனெனில் அரசு நிர்ணய முறைப்படியிலான வீடுகள் கட்ட இவர்களிடம் நிதிவசதியும போதாது; பொருள்களும் போதாது. ஆகவே, நகர்ப்புற நிலவரம்பு சட்டம் மக்களுக்கு உதவும்படியாக இருககாது.

### குறைந்த மதிப்பு வீடுகள் வாங்கவும் பணமில்லையே

இப்பொழுது நகர்ப்புறங்களில் குறைந்த மதிப்பு வீடுகள் கட்டப்பட்டு வருகின்றன. அந்த வீடுகளையாவது பெருமபாலான மக்களால் வாங்க முடிகின்றதா என்றால், அதுவுமில்லை. காரணம் அதற்கான குறைந்த விலையைக் கூட கொடுப்பதற்கு அவர்களிடம் வக்கு இல்லை.

உலக பேங்க் நடத்திய சர்வேயிலும் இந்த சங்கதி வெளிப்படலாயிற்று. வளர்ந்து வரும் நாடுகளில், 6 நகரங்களில் இதுபற்றி ஆராயப்பட்டது. நமது நாட்டில் ஆமதாபாத் நகரிலும ஆய்வு நடத்தப்பட்டது. இந்த ஆய்வு மூலம் தெரியவந்ததுஎன்னவென்றால, குறைந்த வருமானம் உள்ளவர்களுக்கென இப்பொழுது கட்டப்பட்டு வரும் மலிவு விலை வீடுகளைக் கூட, மூன்றின் இரண்டு பகுதி மக்களால் வாங்க இயலாது என்று தெரிய வந்தது.

### மடை பாய்வதெல்லாம் செல்வந்தர் பக்கமே!

வீட்டு வசதி குறித்து, உலக பாங்க் நடத்திய சர்வேயானது இந்த சமுதாயத்திலுள்ள பணக்கார வர்க்கங்களுக்கே மடைவெள்ளம் முழுவதும திறநதுவிடப்படுகின்றது என்ற உண்மையையும பளிச்சென எடுத்துக் காட்டியது.

அதாவது:

"நகர்ப்புற நிலங்களை வினியோகிப்பதும்சரி வீடு கட்டிக்குடியிருப்பதற்கு வேண்டிய தண்ணீர் வசதி. சாக்கடை வசதி, மின்சாரவசதி முதலியவைகளைச் செய்து கொடுப்பதிலும் சரி, இவற்றுக்கான செலவுதொகை மதிப்பீடுகளை நோக்குமிடத்து இவையெல்லாம் மிகவுயர்ந்தவருமானம உள்ளவர்களுக்கே கட்டுக்கோப்பாக பாய்ந்து செல்ல உதவுகிறது'— என்று சுட்டிக்காட்டியுள்ளது.

### குறைந்த வருமானக்காரர்களை நகருக்கு வெளியே விரட்டு

சேரிப்பகுதிகளை ஒழிக்கவேண்டும் அத்துமீறி பொட்டலில் குடிசைபோட்டிருப்பதையும ஒழிக்கவேண்டும என்று அடிக்கடி பிரச்சாரம் செய்யப்படுகிறது. அதன் விளைவு என்ன?

குடிசைவாழ் மக்களையும் சேரிவாழ் மக்களையும் விரட்டியடிக்கது, குடிசைகளை இடிப்பதும், புது வீடுகளைகட்டுவதும் சக்கரச்சுழற்சிபோலதொடர்ந்து நடந்த வண்ணமிருககிறது.

இதனால், குறைந்த வருமானமுள்ள மக்கள், மேலும் மேலும் தொலை தூரங்களுக்கு சட்டி பானைகளைத் தூக்கவேண்டியிருககிறது. அதனால் அவர்களது குடியிருப்புகளுக்கும் வேலை ஸ்தலங்களுக்கும் வெகு தூரம நடந்து சாகவேண்டியிருககிறது. இதனை வீட்டுப் பிரச்சனைகள் மேலும மோசமாகி வருகிறது.

ஆகவே, இந்த நிலைமை இப்படியே நீடிக்க விடககூடாது நகர அமைப்பு, நகர்ப்புற நிலத்தைப்பயன்படுத்தல், நகர்ப்புறததில வீடுகள் கட்டல் ஆகியவற்றை ஒழுங்குபடுத்தி— ஒரு ஒருங்கிணைந்த திட்டம் தேவை.

## பிரதமர் இந்திராகாந்தியோடு பெருமுதலாளிகள் சந்திப்பு

புதுடெல்லி, ஜூலை. 8—

இந்தியாவின் ஏகபோக முதலாளிகளின், வர்த்தகர்களின, தொழில் முதலாளிகளின் சம்மேளனங்களான இந்திய தொழில்வர்த்தக சம்மேளனம, வர்த்தகர்கள் கூட்டமைப்பு, அகில இந்திய உற்பத்தியாளர்சங்கம் ஆகியவற்றின் பிரதிநிதிகள், பிரதமர் இந்திராகாநதியின் இல்லம் சென்றுசந்தித்தனர்.

### முதலாளிகளுக்கு யோசனை

ஏற்கெனவே, பிரதமர் இந்திராகாந்தி அறிவித்த 20 அம்ச பொருளாதாரத்திட்டத்தை ஆதரித்து அறிக்கைகள் வெளியிட்ட அம்முதலாளிகள், இன்று அத்திட்டத்தை அமுல் நடத்துவது பற்றிவிவாதிக்கவே இந்திரா காந்தியின் இல்லம் சென்றனர். அவர்களிடையே 90 நிமிட நேரம் பேசினார். ஏற்கனவே கடந்த 5-ந தேதி வர்க்க சமரச தொழிற் சங்கங்களான ஏ ஐ டி யூ சி, ஐ என் டி யூ சி எச்சீஎஸ் ஆகிய சங்கங்களின் தலையாட்டி பிரதிநிதிகளிடம் "உற்பத்தியைபெருக்கவே தொழிற்சங்கங்கள் பாடுபட வேண்டும எனக் கேட்டுக் கொண்டதுபோல் முதலாளிகளிடமும் உற்பத்தியை பெருக்குங்கள் எனகேட்டுக் கொண்டார்.

இந்திரா காந்தியின் பொருளாதார திட்டத்திற்கு இந்திய தொழிலாளர்களின் முழுஒத்துழைப்பு உண்டு என வர்க்க சமரச தொழிற்சங்க தலைவர்களும, பிரதிநிதிகளும் சத்தியம் செய்தது போல் இம்முதலாளிகள் கூட்டமும் இந்திராகாந்தியின் திட்டத்தை பாராட்டியது. அதோடுமட்டுமின்றி தொழில் துறை, உற்பத்தியில் உள்ளகஷ்டங்களை அரசாங்கம் அறிந்து கொள்ள வேண்டுமென்றுகோரிக்கையும் வைத்தனர்.

அம்முதலாளிகளின் கூட்டத்தில் பேசிய பிரதமர் தொழில்களுக்கு ஏற்படும் கஷ்டங்களுக்குள் அரசாங்கம் தனது கவனத்தை செலுத்தும் அதே நேரத்தில் உற்பத்தியை குறைக்க முயற்சிப்பவர்கள் மீது நடவடிக்கை எடுக்க அரசாங்கம் தயங்காது என்றும் கூறினார்.

மேலும் கடந்த சனிக்கிழமை தான் தொழிற்சங்க தலைவர்களை சந்தித்ததாகவும் அவர்கள் உற்பத்தியையும் உற்பத்தி திறனையும் அதிகரிக்க முதலாளிகளோடு கூடிய பகைமைகளை மூழ்கடிக்கவும், ஒத்துழைக்கவும் அனைத்து முயற்சிகளையும் செய்வதாக அத்தொழிற்சங்கத் தலைவர்கள் வாக்களித்துள்ளார்கள் என்றும் அம்முதலாளிகளிடம் இந்திரா காநதி சுட்டிக் காட்டினார். மேலும் எனவே, உற்பத்தியை அதிகரிப்பதற்கான சூழ்நிலையை முதலாளிகளும் உண்டாக்க வேண்டும என்று கேட்டுக் கொண்டனர்.

மேலும் உற்பத்தியை

2-ம் பக்கம் பார்க்க

## விஸ்வநாத பேரியில் ரூ. 501 நிதியளிப்பு

விஸ்வநாதபேரி, ஜூலை. 8—

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி "தீக்கதிர்' நாளிதழ் வளர்ச்சிநிதிக்காக நெல்லை மாவட்டம் விஸ்வநாதபேரியில் இரண்டாவது தவணையாக ரூ. 501 வழங்கப்பட்டது. கடந்த 23-6-75 ந் தேதி அங்கு தோழர் அ. வீராச்சாமி தலைமையில் நடந்து கட்சி பொதுக்கூட்டத்தில, தமிழக ஜனநாயக மாதர்சங்கச் செயலாளர் தோழர் பாப்பா உமாநாத்திடம், கட்சிக்கிளைச் செயலாளர் தோழர் எம். எஸ். பெரியசாமி வழங்கினார்.

### சிவகிரி கட்சி அலுவலக நிதி

இதே கூட்டத்தில், சிவகிரியில் கட்டப்பட்டு வரும் கட்சி அலுவலகக் கட்டிட நிதிக்காக ரூ 300.ம வழங்கப்பட்டது.

இக்கூட்டத்தில் தோழர்கள் சிங்கை பி. சொர்ணம், எம். பாண்டியன் ஆகியோரும பேசினர்.

ஏற்கனவே விஸ்வநாதபேரியில் வளர்ச்சி நிதிக்காக முதல தவணையாக தோழர் ஏ. பாலசுப்ரமண்யத்திடம் ரூ. 500 வழங்கப்பட்டுள்ளது.

## பாசிசம் என்றால் என்ன?

### ஜவகர்லால் நேரு விளக்கம்

பாசிசம் இன்று ஏனைய நாடுகளிலும் பரவியுள்ளதால், அது இத்தாலிக்கு மட்டும் பொருந்தக் கூடிய தனித்தன்மை பெற்ற ஒன்றல்ல. ஒரு நாட்டில் விசேஷ சமூக, பொருளாதார சூழ்நிலைகள் ஏற்படும்போது வெளிப்படுகின்ற ஒரு நிகழ்ச்சிப் பரிணாமம்தான் பாசிசம் என்று தெளிவாகி விட்டது,

தொழிலாளிகள் பிரபலமடைந்து, முதலாளித்துவ அரசின் இருப்பிடத்தையே பயமுறுத்தும் போது, முதலாளி வர்க்கம் தங்களைக் காப்பாற்றிக் கொள்வதற்காக தயாராகிக் கொள்வது இயற்கையே. கடுமையான ஒரு பொருளாதார நெருக்கடி ஏற்படும்போதுதான் தொழிலாளிகள் தரப்பிலிருந்து ஒரு அச்சுறுத்தல் வெளிப்படுவது வழக்கம்.

இந்த உடைமை வர்க்கங்களும் ஆளும் வர்க்கங்களும் தங்களால் எப்போது போலீஸ், இராணுவம் ஆகியவற்றின் உதவியால்- சாதாரண ஜனநாயக முறைகளால்-தொழிலாளிகளை ஒடுக்குவதற்கு முடியாமலாகிறதோ, அப்போதெல்லாம் அவர்கள் பாசிசமுறைகளை ஏற்றுக்கொண்டார்கள். வெளிப்படையாக மக்களை ஆசை காட்டுவதற்குத் தேவையான கோஷங்களை எழுப்புவதும்; ஆனால் அதே வேளையில் மறைமுகமாக உடனே முதலாளி வர்க்கங்களின் நலன்களைப் பாதுகாப்பதுமான ஒரு வெகுஜன இயக்கத்தைக் கட்டவேண்டுமென்பது தான் அதன் நோக்கம்.

வேலையில்லாத் திண்டாட்டத்தின் காரணமாக துன்பங்கள் அனுபவித்துக் கொண்டிருக்கும் தாழ்ந்த மத்தியதரப்பகுதியினர்தான் இந்த இயக்கத்தின் முதுகெலும்பாக செயல்படுவார்கள். எந்த அணியிலும் சேராதவர்களும் அரசியல் ரீதியாக பின்தங்கி நிற்பவர்களுமான தொழிலாளிகள்கூட இந்த கோஷங்களால் கவரப்பட்டு, தங்களின் வாழ்க்கை நிலை உயர்வடைந்துவிடும் என்ற நப்பாசையால் இந்த அணிகளில் வந்து சேருகிறார்கள். மத்திய வர்க்கத்திலுள்ள உயர் பிரிவினர்தான் தங்களின் நலன்களை பாதுகாப்பதற்காக, இதற்கான எல்லா பொருளுதவியும் செய்கிறார்கள்.

அககிரமங்களை ஒரு நம்பிக்கைப்பிரமாணமாகவும், அன்றாட நடவடிக்கையாகவும் ஏற்று அமுல்படுத்துகின்ற கடுமையான வன்முறைகளைக் கூட, நாட்டிலிருக்கும் முதலாளித்துவ அரசு அனேகமாக ஆதரித்து வலுவூட்டுகிறது. ஏனெனில் ஒரு பொது எதிரியை, சோசலிஸ்ட் தொழிலாளிகளை அல்லவா அது எதிர்க்கிறது? அதுமட்டுமல்ல; தொழிலாளர் ஸ்தாபனங்களை நாசப்படுத்துவதும் எதிரிகளைபயமுறுத்திகீழ்ப்படுத்துவதும்தான் ஓரேகட்சி என்ற நிலையில் அவர்களின் பிரதான திட்டம். அந்த கட்சி ஒரு நாட்டில் ஆட்சிக்கு வந்தால், எப்படிப்பட்ட நிலை உருவாகுமென்பதை சொல்லவும் வேண்டுமா?

பண்டிட்நேரு, தனது மகள் இந்திரா பிரியதரிசினிக்கு எழுதிய கடிதங்களின் தொகுப்பான 'உலக சரித்திரம்' எனும நூலிலிருந்து.

# தீக்கதிர்

## இது அவசர காலம்

## இந்திரா காந்தியின் திட்டத்திற்கு இந்தியாவின் 'முதல்பரம' ஏழை ஆதரவு அளிக்கிறார்

பம்பாய், ஜூலை. 6—

இந்திரா காந்தி அறிவித்துள்ள 20 அம்ச பொருளாதார திட்டத்தை ஆதரித்து இந்தியாவின 'பரம ஏழை'களில் ஒருவரான டாடா அறிக்கையொன்றை வெளியிட்டுள்ளார். இந்த 'பரம ஏழை'தான் இந்தியாவின் 75 ஏகபோக முதலாளிகளில் முதல் பெரும் தொழில் முதலை இந்திய முதலாளிகள் சங்கத்தின் தலைவன்.

அவர் தனது அறிக்கையில் இந்தியாவில் உள்ள பஞ்சத்தை விரைவாக ஒழிக்க வேண்டும் என்பதும் மக்களின் வாழ்க்கை தரத்தை உயர்த்த வேண்டும் என்பதும இந்திய அரசின் ஆர்வமாகும் அதன் அறிகுறியே பிரதமர் இந்திரா காந்தி அறிவித்துள்ள பொருளாதாரத் திட்டமாகும் என்று குறிப்பிட்டு அத்திட்டத்தை வரவேற்றுள்ளார்.

இந்திராகாந்தியின் திட்டங்கள் நாட்டினுடைய பொருளாதாரத்தின் பல்வேறு அம்சங்களையும் தொட்டுள்ளது என்று குறிப்பிட்டுள்ளார்.

மேலும் டாடா தனது அறிக்கையில் தொடர்கிறார்: சமூக, பொருளாதார அளவில் மிக கீழ் மட்டத்தில் கிராமப் பகுதிகள் உள்ளது. குறிப்பாக விவசாயத் தொழிலாளர் அந்நிலையில் உள்ளனர். அவர்களுடைய முன்னேற்றத்திற்கு வெளியிடப்பட்ட திட்டத்தில் முக்கியத்துவம் கொடுக்கப்பட்டிருப்பது கண்டு இந்தியமுதலாளிகள் சம்மேளனம் பெருமகிழ்ச்சி அடைகிறதாம்.

### வலது கம்யூ.கள் கூறும் ஏழை இவர்தானு?

இந்திரா காந்தியின் பொருளாதாரத் திட்டத்தை அமுல்படுத்த இந்திய தொழிலாளி வர்க்கம் ஆதரவு தரும் இந்திய மக்களின் ஆதரவு உண்டு என வலது கம்யூனிஸ்ட் கட்சி போன்ற காங்கிரசுக் கட்சியின் ஊதுகுழல்கள் கூப்பாடு போடுகின்றன. அப்படிப்பட்ட ஏழை மக்களில் டாடாவும் ஒருவர் போலும்.

### ஜனநாயகப் பாதுகாப்பு பொதுக்கூட்டங்கள்

சங்கரன்கோவில், ஜூலை, 7—

சங்கரன்கோவில் தாலுகா வாலிபர் முன்னணியின் தாலுகா குழுக் கூட்டம் திருவேங்கடத்தில் 3-ந் தேதியன்று நடந்தது தோழர்கள் எம் செலவராஜ், ஏ மாடசாமி, எஸ் பழனி, எம் மாடசாமி, கே சந்தசாமி ஆகியோர் கலந்து கொண்டனர். ஜனநாயகத்தைக் காக்க வேண்டிய அவசியத்தை உணர்த்திப்பேசப்பட்டது.

ஜூலை 4-ந்தேதி சுவாமி சன்னதியில் நடந்த பொதுக் கூட்டத்தில் ஜனநாயகத்தை காக்க வேண்டிய அவசியத்தை உணர்த்தியும், 'புதிய நெருக்கடிநிலை' குறித்தும் சிஐடியூ உபதலைவர் பி செ ரணம், சோசலிஸ்ட் கட்சித் தலைவர் என் பரமசிவம், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின நகரச் செயலாளர் ஆர் எஸ் மூப்பிடாதி, ஆகியோர் பேசினர். தோழர் டி ஆர் ஆறுமுகம் தலைமை வகிததார்.

### குருவிகுளத்தில்

இங்கு நடந்த 4-ந் தேதியன்று ஹோசிமின் திடலில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் ஜனநாயகம்பாதுகாப்புப்பொதுக் கூட்டம் நடந்தது. தேழர் தவமுடையார் தலைமை வகித்தார்.

மாவட்ட செயலாளர் சு பாலவிநாயகம், உதவிச் செயலாளர் எம்பாண்டியன், கே கந்தசாமி (தொழிற்சங்க செயலாளர்), கே வி பாண்டியன் [வாலிபர் முன்னணி], ச சுப்பையா ஆகியோர் பேசினார்கள்.

இறுதியில் மதுரை குமார் குழுவினரின் இன்னிசை நிகழ்ச்சிகள் நடந்தன.

### அவசர நிலை ஜனாதிபதிக்கு மகஜர்கள்

சங்கரன்கோவில், ஜூலை. 7—

நெல்லை மாவட்டம் சங்கரன் கோவில் தாலுகாவில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின்சங்கரன் கோவில், குருவிகுளம் நாராயணபுரம் கிளைகளின் சார்பில் இந்திய அரசுக்கும் குடியரசுத்தலைவருக்கும் தபால் மூலம மகஜர்கள் அனுப்பப்பட்டுள்ளன.

அந்த மகஜர்களில், அவசர கால நிலையை வாபஸ் பெறக்கோரியும், 'மிசா'வின் கீழ் கைது செய்யப்பட்டு காவலில் உள்ள அரசியல் தலைவர்களை விடுதலை செய்யக் கோரியும் வற்புறுத்தப்பட்டிருந்தன.

இக்கூட்டங்களில், அவசர நிலையை வாபஸ் பெறக் கோரியும், 'மிசா'வில் கைது செய்யப்பட்டவர்களை விடுதலை செய்யக் கோரியும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

## சிலியில் 1970-ம் ஆண்டிலேயே சி. ஐ. ஏ. யின் சதி உருவானது

வாஷிங்டன், ஜூலை. 7—

அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகளின் உளவு ஸ்தாபனமான சி ஐ ஏ 1970-ம் ஆண்டிலேயே சிலி நாட்டு அரசாங்கத்தை கவிழ்க்க சதி செய்தது என்றும் ஆனால் அச்சதி, சிலி நாட்டு ராணுவ கமாண்டர் ரென் ஸ்னெய்டர் என்பவரின் கொலையில் முடிந்தது என்று வாஷிங்டன் போஸ்ட் என்னும் பத்திரிகை கூறியுள்ளது.

மேலும் ஸ்னெய்டர் 1970-ம் ஆண்டு அக்டோபர் 22-ல் சாண்டியாகோவில் உள்ள தனது அலுவலகத்துக்குசென்றுகொண்டிருந்த போது சி ஐ ஏ உளவாளிகள் அவரை கடத்த முயற்சித்தார்கள் என்றும் அப்போது அவர் தற்காப்புக்காக தனது துப்பாக்கியை எடுத்தபோது அவரைக் கடத்திக் கொண்டு செல்லவந்தவர்கள் சுட்டுத்தள்ளிவிட்டனர் என்றும் அப்பத்திரிகை கூறுகிறது.

### சதியின் நோக்கம்

சால்வடோர் அலேண்டேயை ஜனாதிபதியாக அந்நாட்டு நாடாளுமன்றம் உறுதிப்படுத்துவதற்கு இரண்டு நாட்களுக்கு முன்பு இக்கடத்தல் நடைபெற்றுள்ளது. இக்கடத்தல் நடத்தப்படுவதற்கான காரணம். ராணுவத்தலைவர்களுக்கு எதிரான இம்மாதிரியான நிகழ்ச்சிகள் நாட்டில் ராணுவ ஆட்சியை கொண்டு வர உதவும் என்பதும் சால்வடோர் அலெண்டேயின் அரசாங்கம் அமைக்கப்படவிடாமல் தடுத்துவிட முடியும் என்ற சி ஐ ஏ யின் முடிவுகளே,

மேலும் வாஷிங்டன் போஸ்ட கூறுகிறது "உலகம் முழுவதிலும் உள்ள தனிப்பட்ட 'எதிரிகளின் பட்டியல்' ஒன்றை சி ஐ ஏ வைத்துள்ளது அமெரிக்காவின் நலனுக்கு எதிரானவர்களை அப்பட்டியலில இருப்பார்கள் அதில் ரென்டஸ் நெய்டெர் என்பவர்கள் பெயரும் இருந்திருக்கிறது. ஆனால் அவரைகொலை செய்யவேண்டும் என்ற நோக்கம் சி ஐ ஏ.க்கு இல்லை யென அதன ஏஜென்ஸி தகவல்கள் கூறுகின்றன.

### தொடர் நிகழ்ச்சி

மேலும் ஸ்னெய்டரை கடத்த முயற்சித்த சி ஐ ஏ யின் கையாட்களுக்கு சி ஐ ஏ. பணம் மற்றும்பல உதவிகள் கொடுத்ததா இல்லையா என்பதைத் தீர்மானமாக கூற முடியவில்லை. என்று குறிப்பிட்ட வாஷிங்டன் போஸ்ட், மேலும் அச்சதிகாரர்களுக்கு அக்கடத்தல் வேலையை செய்ய சி ஐ ஏ. யின் தூண்டுதலும் ஊக்கமும் கொடுக்கப்பட்டது என்றும் ஏஜென்ஸி தகவல்கள் கூறுகின்றன என்றும் அப்பத்திரிக்கை கூறியது,

சி ஐ ஏ யின் கையாட்களால் கடத்த முயற்சிக்கப்பட்டு 1970-ம் ஆண்டு அக்டோபர் 20ல் கொலை செய்யப்பட்ட சிலி நாட்டு ராணுவ கமாண்டர் மக்களின் வாக்கு முடிவுகளை ராணுவம் மதிக்கவேண்டும் எனபதை வலியுறுத்தியவர் ஆகையினால்தான ஸ்னெஸ்டெர் சி ஐ ஏ. யின் எதிரிகளின் பட்டியலில் இடம் பெற்றார் ஆனால் ராணுவத்தில் உள்ள வலதுசாரி பிற்போக்குவாதிகள், அலெண்டேயின் ஆட்சிஏற்படுவதை தடுக்கவேண்டும், ராணுவ ஆட்சி கொண்டுவரப்பட வேண்டும் என்பதை வற்புறுத்தினர் இச்சதிநிகழ்ச்சிகளின தொடர்ச்சியாக 1973-ம் ஆண்டு செப்டம்பரில் அலெண்டேயின் கொலை நடைபெற்றது.

### பழனித்தாலுகாவில் 'அவசர நிலை' குறித்து பொதுக்கூட்டங்கள்

பழனி, ஜூலை. 7—

மார்க்சிஸ்ட் கம்யூனிட் கட்சி சார்பில், பழனிக தாலுகாவின பல பகுதிகளிலும் ஜூன் 28-ந் தேதி முதல் ஜூலை 2-ந் தேதி முடிய அவசர நிலை குறித்து பொதுக் கூட்டங்கள் நடந்தன. மதுரை பாலு குழுவினர் இன்னிசை நிகழ்ச்சிகளும் நடந்தன.

#### பழனி

இங்குள்ள அடிவாரத்தில் கறிக்கடை மைதானத்தில் 28-ந் தேதியன்று தோழர் பொன்னுச்சாமி தலைமையில் நடந்த பொதுக்கூட்டத்தில் தாலுகாச் செயலாளர். ஏ எஸ் காளிமுத்து எம் சண்முகம், உசேன் ஆகிய தோழர்கள் பேசினர்.

#### சத்திரப்பட்டி

இங்கு 29-ந் தேதியன்று நடந்த பொதுக்கூட்டத்தில் ஏ. எஸ் காளிமுத்து, எம். கருணாகரன், சண்முகவேல் ஆகியோர் பேசினர்.

#### ஆயக்குடியில் கட்டிடத் திறப்புவிழா

இங்கு கடந்த 30-ந்தேதியன்று கட்சிக்கிளை அலுவலகக் கட்டிடத்திறப்புவிழா நடந்தது. தமிழ்நாடு விவசாயிகள் சங்கத்தலைவர் தோழர் ஆ ராமராஜ். என் வரதராஜன், கே வி பாலசேகர். என பழனிவேலு ஆகியோர் பேசினர்.

#### பாலசமுத்திரம்

இங்கு ஜூலை 1 ந்தேதியன்று நடந்த பொதுக்கூட்டத்தில் தோழர்கள் ஏ சிலுவை முத்து, பி கே கருப்புசாமி, வி ஏ கருப்புசாமி ஆகியோர் பேசினர்.

#### நெய்க்காரப்பட்டி

இங்கு பெரிய கலையம்புத்தூரில் நடந்த பொதுக் கூட்டத்தில் தோழர்கள் பி ஆறுமுகம். பி கே கருப்புசாமி, ஏ எஸ் காளிமுத்து, வி. ஏ,கருப்புசாமி, திண்டுக்கல் எஸ் ஏ தங்கராஜ ஆகியோர் பேசினர்.

இக்கூட்டங்களின் இறுதியில மதுரை பாலு குழுவினரின் இன்னிசை நிகழ்ச்சிகள் நடந்தன.

ஜனநாயக உரிமைகளை பாதுகாக்க வேண்டிய அவசியத்தை இக்கூட்டத்தில் பேசிய தோழர்கள் வற்புறுத்தினர்.

#### தீர்மானம்

இக்கூட்டங்கள் அனைத்திலும், அவசர கால நிலைப் பிரகடனத்தை வாபஸ் பெற கோரியும் 'மிசா'வின் கீழ் கைதான அரசியல் தலைவர்களை விடுதலை செய்யக் கோரியும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

2-ம் பத்தி தொடர்ச்சி

னேறிச் செல்லவுமான சந்தர்பங்களை அவசர நிலை பிரகடனம் கொடுத்துள்ளது அச்சந்தர்ப்பங்களை பயன்படுத்திக்கொள்ள வேண்டும் என்று வற்புறுத்திய பிரதமர் இந்திரா காந்தி அவசரநிலை என்றால் ஒவ்வொரு திட்டமும் புதிதாக இருக்கவேண்டும் என்று அர்த்தமல்ல, ஆனால் ஒவ்வொரு விஷயமும் சிறப்பாகவும் அவசர உணர்வோடும் செய்யப்பட வேண்டும் என்பதுதான் என்றும கூறினர்.

மேலும் இடைத் தரகர்களை ஒழித்து தரமுள்ள பொருட்களை வினியோகம் செய்யும் வகையில் உற்பத்தி செய்யப்படும் பொருட்களின் தரத்தை உயர்த்தவேண்டும் என்றும் கேட்டுக்கொண்டார்.

மேலும் இன்று பிரதமர் இந்திரா காந்தியின் கொள்கைகளுக்கு ஆதரவு தெரிவிக்கவும் அவர் தலைமையின் தங்களது நம்பிக்கையை அறிவிக்கவும் வியாபாரிகளின் கூட்டமும் ஒன்று பிரதமரின் இல்லத்திற்கு தனியாக வந்திருந்தது

அவர்களிடம் பேசிய பிரதமர் சமுதாயத்தன் பொறுப்புள்ள மனிதர்கள் நாட்டின் நலனை தங்களுடைய சொந்த நலனைவிட முக்கியமாக கருதாவிட்டால் நாட்டில் அநியாயம் அழிக்க முடியாது என்று போதித்தார். மேலும் வியாபாரிகள் நியாயமானவர்களாக இருக்கவேண்டும்.

சில வியாபாரிகள் மட்டும் மோசடிநடவடிக்கைகளில் ஈடுபடுகிறார்களாம். அதனால் வியாபார சமுதாயமே கெட்டபெயர் எடுத்து விடுகிறதாம் வியாபாரிகள் பற்றிய கருத்தைபிரதமர் இந்திரா காந்தியே வெளியிட்டார்.

## ஆசிரியருக்கு...

### உணவுப் பங்கீட்டு அட்டை வழங்குவதில் தாமதம்

ஐயா,

சென்னை நகரில் எல்லாக் குடும்பங்களுக்கும் உணவுப் பொருள் பங்கீட்டு அட்டைகள் புதிதாக வழங்கப்பட்டு விட்டதாக அதிகாரிகள் அறிவித்து விட்டனர். ஆனால், உண்மையில் பங்கீட்டு அட்டைகள் கிடைக்காமல் திண்டாடுபவர்களை இன்னமும் பங்கீட்டு அதிகாரிகளது அலுவலகங்களில் காணலாம்.

உதாரணமாக,

என்னுடைய 'எனுமரேசன் பாரம்' எண்; 665076 எனக்கு புதிய பங்கீட்டு அட்டை கிடைக்காதது பற்றி 3—1—75லேயேபுகார் மனு கொடுத்தேன். பின்னர் பங்கீட்டு அதிகாரி அலுவலகங்களில பலமுறை சென்று விசாரித்தேன். அதற்கு 'மூன்று நாட்களில் புதிய அட்டை உங்கள் வீடுவந்து சேரும்' என்று பதில் கூறப்பட்டது. இப்படி எத்தனை எத்தனையோ மூன்று நாட்கள் கடந்து விட்டன. எப்போது போனாலும் இதே பதில்தான்! கெல்லீஸில் உள்ள சிவில் சப்ளை தலைமை அலுவலகத்தின் கவரில் இவ்வாறு எழுதியும் உள்ளார்கள்.

இவ்வாறு, புதிய அட்டை கிடைக்காமல் ஆயிரக்கணக்கானவர்கள் திண்டாடுகிறார்கள். வெளிமார்க்கெட்டில அதிக விலை கொடுத்து உணவு பொருட்கள் வாங்க முடியாமல் மக்கள் பட்டினிச் சாவில் துவண்டு கிடக்கின்றனர். ஆனால் அதிகாரிகளோ பாராமுகமாக உள்ளனர்.

எனவே புதிய கார்டுகளை விரைவில் வழங்கிட முடியாவிட்டால் பழைய கார்டுகள் மூலமாகவாவது உணவுப் பொருட்கள் வழங்கிட வேண்டும்.

அதே போல், கார்டு தாமதமாகக் கொடுப்பதால், வாங்க முடியாமல் விடப்படுகிற பண்டங்களை பெறவும் விஷேச ஏற்பாடு செய்ய வேண்டும் என்றும் கோருகிறேன்.

இப்படிக்கு,

சி. பழனிவேலு,

சென்னை-600023

## காலம் கொஞ்சம் திரும்புச்சுன்னு கவனிக்காமெப் போகாது

மக்கள் கவிஞர்

பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம்

ஒருவன்: மூளை நெறஞ்சவங்க காலம் தெரிஞ்சவங்க
மூத்தவங்க படிச்சவங்க வாழுகின்ற
நாடு!—இது (மூளை)

இரண்டாம் ஆள்: மூச்சுத் திணறுதுங்க முளியும் பிதுங்குதுங்க
பாத்துக்குங்க கேட்டுக்குங்க ஜனங்கள்,
படும் பாடு!—இது

ஒருவன்: நெலமை இப்படி இருக்குது
நீதி கெடந்து தவிக்குது
கொடுமை மேலே கொடுமை
வளர்ந்து நெறுக்குது—அது
அருமையான பொறுமையைத்தான்
கெடுக்குது—ஊர் (நெலமை)

மற்றவன்: பாதை மாறி நடக்குது,
பாஞ்சு பாஞ்சு மொறைக்குது,
பழமையான பெருமைகளைக்
கொறைக்குது—நல்ல
பழக்கமெல்லாம் பஞ்சு பஞ்சாப்
பறக்குது—ஊர் (நெலமை)

ஒருவன்: என்ன இருந்தாலும் மனுசன்
இப்படி ஆடக் கூடாது.

மற்றவன்: எதுக்கும் ஒரு முடிவிருக்குது
அதிக நாளு ஆடாது,

ஒருவன்: ஏழைகளை அடிச்சுப் பறிக்கும்
எண்ணம் உடம்புக்காகாது.

மற்றவன்: காலம் கொஞ்சம் திரும்புச்சுன்னு
கவனிக்காமெப் போகாது—ஊர் (நெலமை)

ஒருவன்: அன்பு வளர்ந்த கோட்டைக்குள்ளே
அகந்தை புகுந்து கலைக்குது.

மற்றவன்: வரம்பு மீறி வலுத்த கைகள்
மக்கள் கழுத்தை நெறிக்குது இரும்புக்கரம்

ஒருவன்: விருப்பம் போல நரிகள் சேர்ந்து
வேட்டையாடிக் குவிக்குது.

மற்றவன்: வெறிநாய்க்கு உரிமை வந்து
வீட்டுக்காரனைக் கடிக்குது—ஊர் (நெலமை)

'உத்தமபுத்திரன்' திரைப்படத்துக்காக 1958-ல் எழுதியது.

## தர்ணா கைகழுவப்பட்டது

புதுடெல்லி ஜூலை.6—

வலது கம்யூனிஸ்ட் கட்சியின் நாடாளுமன்ற உறுப்பினர் எஸ் எம் பானர்ஜி தலைமையில உள்ள அகில இந்திய பாதுகாப்பு ஊழியர் சம்மேளனம் சார்பாக ஜூலை 14. 15ல் நடத்துவதாக இருந்த தர்ணாவை நடத்த வேண்டாம் என அச்சம்மேளன தலைமை அறிக்கை விட்டுள்ளது.

அச்சம்மேளன தலைவர் எஸ் எம் பானர்ஜியும், பொதுச் செயலாளர் மாத்யூவும் வெளியிட்ட அக்கூட்டறிக்கையில் மேலும் பாதுகாப்பு அமைச்சர் வீட்டு முன்பு ஜூலை 18,19 தேதிகளில் நடத்த திட்டமிட்டிருந்த தர்ணாவும் கைவிடப்பட்டது என கூறியுள்ளனர்.

## பெருமுதலாளிகள் சந்திப்பு...

[1-ம் பக்க தொடர்ச்சி]

அதிகரிப்பதில் தொழிலாளர்களின் பங்குக்கு வழிவகை செய்து தருமாறும் அம்முதலாளிகளுக்கு பிரதமர் இந்திரா காந்தி வழிகாட்டினார்.

முதலாளிகள் தங்கள் தொழிற்சாலைகளின் உற்பத்தித் திறன் முழுமையையும் பயன் படுத்த வேண்டும் என்றும் உற்பத்தியை பெருக்கும் பொருட்டு தொழிற்சாலைகளுக்கு தேவையான மின்சாரம், நிலக்கரி, விவசாய மூலப்பொருட்கள், கிடைக்கவும் தேவையான இறக்குமதி செய்ய வேண்டியமூலப் பொருட்களுக்கும் அரசாங்கம் அனைத்து ஏற்பாடுகளையும் செய்யும் என்றும் வாக்குறுதி அளித்துள்ளார்.

### அவசர நிலையை பயன்படுத்திக் கொள்ள

மேலும் அவசர குறித்து பிரதமர் பேசினார். பழைய தடைகளை தகர்க்கவும், முன்

(6-ம் பத்தி பார்க்க)

## இந்திய தபால்-தந்தி துறை

சென்னை டெலிபோன்ஸ்

சென்னை - 600001

### டெக்னீஷியன்கள் தேவை

மொத்த இடங்கள்: 97. தாழ்த்தப்பட்ட வகுப்பினர் —18 தாழ்த்தப்பட்ட பழங்குடியினர்—5 முன்னாள் ராணுவத்தினர் —10, மற்ற வகுப்பினர்-64,

காலி இடங்கள் மாற்றத்தக்கவை ஆகும்.

**ஊதிய விகிதம்:** ரூ 260-8-300-EB-8-340-10-360-12-420-EB-12-480 இத்துடன் சட்டப்படியான மற்ற அலவன்ஸ்களும் உண்டு.

**வயது:** 1—7—1975-ல் 18 வயதுக்கும் 24 வயதுக்கும இடையில் இருக்கவேண்டும். உயர்ந்த பட்ச வயது வரம்பு கீழ்க்கண்டவாறு தளர்த்தப்படும். (1) தாழ்த்தப்பட்ட வகுப்பினர். பழங்குடியினருக்கு 5 ஆண்டுகள (2) முன்னாள் ராணுவத்தினர், கிழக்குப் பாகிஸ்தானிலிருந்து குடிபெயர்ந்தவர்கள், பர்மா, இலங்கை அகதிகள: கோவா, டையூ, டாமன் வாசிகள். கென்யா, உகாண்டா, தாஞ்சானியா குடியரசிலிருந்து குடியேறியவர்கள் போன்ற மற்ற பிரிவினருக்கு வழக்கத்தில் உள்ளபடி வயது வரம்பு தளர்த்தப்படும.

**முன்னுரிமை வரிசையில் வேலைக்குதேவையான கல்வித் தகுதிகள் வருமாறு:** [1] பட்டதாரிகள் (என்ஜினியரிங்) மற்றும பி. எஸ்சி: மத்திய அரசு அங்கீகாரம் பெற்ற ஏதாவது ஒரு டெக்னிக்கல் இன்ஸ்டிடியூட்டில் எலெக்டரிகல், மெகானிகல், ரேடியோ, டெலிகம்யூனிகேஷன், எலக்ட்ரானிகஸ் ஏதாவது ஒரு டிப்ளமா, மாநில தொழில் நுட்பக் கல்வி போர்டு வழங்கும் டிப்ளமா. [2] மத்திய அரசு அங்கீகாரம் பெற்ற ஏதாவது ஒரு தொழில் பயிற்சிக் கழகத்தில மெகானிகல், எலெக்டரிகல், ரேடியோ டெக்னீஷியன் திறன், இன்ஸ்ட்ருமெண்ட் மெகானிக் அப்பிரண்டிஸ் சர்டிபிகேட் இதற்கு Voeational trades பயிற்சிக்கான தேசியக் கவுன்சில் தேர்வு நடத்தி சர்டிபிகேட் தருவதாக இருக்கவேண்டும். [3] மத்திய அரசு அங்கீகாரம பெற்ற ஏதாவது ஒரு தொழில் பயிற்சி நிலையத்தில எலெக்டரிகல், இன்ஸ்ருமெண்ட் மெகானிக்: ரேடியோ மெகானிக், எலெக்ட்ரானிகஸ் ஏதாவது ஒன்றில நேஷனல் டிரேட் சர்டிபிகேட். இதற்கு தேர்வு நடத்தி சர்டிபிகேட் தருவது. Voeational trades பயிற்சிக்கான நேஷனல் கவுன்சிலாக இருக்க வேண்டும். (4) மெட்ரிகுலேசன், உயர்நிலைப்பள்ளி, உயர் செகண்டரி பள்ளி அல்லது அதற்குச் சமமான தேர்வு தேறியிருப்பது. பௌதீகம, கணிதம அல்லது கணிதம விஞ்ஞானம் அல்லது பொது விஞ்ஞானத்தை பாடமாக படித்திருக்க வேண்டும்.

**செலக்ஷன்:** மேலே குறிப்பிடப்பட்ட வரிசை முறையில பட்டதாரி அல்லது டிப்ளமோ தேர்வுகளில் சர்டிபிகேட் தேர்வுகளில் எடுக்கப்பட்டுள்ள மார்க்குகளின் அடிப்படையில் செலக்ஷன் செய்யப்படும்.

**பயிற்சிக் காலம்:** ஓராண்டு காலம். மாதந்தோறும் ரூ 80 உதவித் தொகை வழங்கப்படும்.

**வேலை நிபந்தனைகள் (Service Conditions):** முதலாவதாக தமிழ் நாடு டெலிகம்யூனிகேசன்களுக்குள் நியமிக்கப்படுவார்கள். ஆனால் இந்தியாவின் எந்தப் பகுதிக்கும் மாற்றப்படலாம். அவசியமானால் விண்ணப்பதாரர்கள் 1948-ம் ஆண்டு வட்டார சேனை சட்டம. அதன் விதிகளின்படி தபால தந்தித்துறை (வட்டார சேனை) சிக்னல் யூனிட்டுகளில் பணியாற்ற வேண்டி இருக்கும்.

**குறிப்பு:** விண்ணப்பதாரர்கள்தமிழ்நாடு, பாண்டிச்சேரி ஆகிய மாநிலங்களில் உள்ள ஏதாவது ஒரு எம்ப்ளாய்மெண்ட எக்ஸ்சேஞ்சில் பெயரை பதிவு செய்திருக்கவேண்டும். இவ்வாறு பதிவு செய்தது புதுப்பிக்கப்பட்டு; காலாவதியாகமல் இருக்கவேண்டும்.

"ஜெனரல் மானேஜர், டெலி கம்யூனி கேசன்ஸ் தமிழ் நாடு சர்க்கிள் சென்னை-600002" என்ற முகவரியில வரவேற்பு கவுண்டரில வேலைநாட்களில்விண்ணப்பத்தை பெற்றுக் கொள்ளலாம. அதற்கு ஏ.சி.ஜி.-67 பாரத்தில் பண ரசீதுடன் எழுததுமூலம் விண்ணப்பிக்க வேண்டும்.

ஏதாவது ஒரு தபால் நிலையத்தில் ஒரு ரூபாய் செலுத்தி இந்த பண ரசீதைப் பெறலாம். தாழ்த்தப்பட்ட வகுப்பினர் பழங்குடியினர் 25 காசு கொடுத்தால் போதும். இந்தப் பணம திருப்பித் தரப்படமாட்டாது.

பூர்த்தி செய்யப்பட்ட விண்ணப்பங்கள் "ஜெனரல் மானேஜர், டெலி கம்யூனி கேசன்ஸ் தமிழ் நாடு சர்க்கிள் சென்னை-600002" என்ற முகவரிக்கு 6-8-1975 அல்லது அதற்கு முன் கிடைத்திடவேண்டும்.

விண்ணப்பம் அனுப்பும் கவரில் கொட்டை எழுத்துக்களில் "APPLICATION FOR THE POST OF TECNICIANS" என்று எழுதி அனுப்பவேண்டும்.

Davp 711 (93) / 75

## தயாராகிவிட்டது!

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின்

தமிழ் மாநிலச் செயலாளர்

தோழர் ஏ. பாலசுப்ரமண்யம் எழுதிய

### "முதலாளித்துவ தேர்தல்கள் — நாடாளுமன்ற அமைப்பு—நாம்"

விலை 25 காசு

வெளியீடு:

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்)

தமிழ் மாநிலக் குழு

6/16 பைபாஸ்ரோடு

மதுரை—625018

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக் குழு சார்பில் தீக்கதிர் அச்சகத்தில் (6-16 பைபாஸ்ரோடு, மதுரை 625018) அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர் கே. முத்தையா.